


ஜி.ஏ. கௌதம்

கட்டுரை

# ஃபர்ஹா:

## வரலாற்றின் பக்கங்களில் சேர்க்க மறந்த ஒரு கதை

1948 ஆம் ஆண்டில் பாலஸ்தீனியர்கள் தங்கள் தாயகத்திலிருந்து இடம்பெயர்ந்த கொடூரமான நிகழ்வினைக் கடந்துவந்த ஓர் இளம் பாலஸ்தீனியப் பெண்ணின் உண்மைக் கதையை அடிப்படையாகக் கொண்டது இத்திரைப்படம். போரின் கொடூரங்களை நேரடியாகக் காணும் 'ஃபர்ஹா' என்ற இளம்பெண்ணின் வழியே இக்கதையைச் சொல்கிறார் இயக்குனர் டாரின் ஜே சலாம்.

பாலஸ்தீனத்தில் உள்ள ஒரு சிறிய கிராமத்தில் தனது தந்தையுடன் வசிக்கிறாள் ஃபர்ஹா என்ற 14 வயது சிறுமி. தனது உயிர்த்தோழி ஃபரிதாவைப் போல அவளும் அருகாமை நகரப் பள்ளிக்குச் சென்று, மேற்படிப்பைத் தொடர விரும்புகிறாள். நாசர் எனும் உறவுக்காரப் பையனுக்கு அவளைத் திருமணம் செய்துவைக்க விரும்பும் அவளது தந்தை முதலில் மறுக்கிறார். இருந்தாலும் அவளது விருப்பத்தைப் புரிந்துகொண்டபின், பள்ளிச் சேர்க்கைக்கான ரசீதை அவளிடம் கொடுக்கிறார். இப்படி ஒரு வழியாக, தந்தையிடமிருந்து அனுமதியும் கிடைக்க, இனியெல்லாம் சுகமே என்று ஊஞ்சலில் ஆடிக்கொண்டிருந்தவளின் நிம்மதியில் விழுகிறது முதல் குண்டு. இஸ்ரேலியப் படைகள் அவர்களது கிராமத்தை நெருங்குகின்றன. மோதல் தீவிரமடைவதால், பாலஸ்தீனியர்கள் தங்கள் தாயகத்திலிருந்து இடம்பெயர வேண்டிய சூழல். அருகிலிருக்கும் நகருக்குத் தப்பிச்செல்லும் ஃபரிதாவின் குடும்பத்துடன் ஃபர்ஹாவை அனுப்புகிறார் அவளது தந்தை. தனது தந்தையைப் பிரிய மனமின்றி, நகருக்குச் செல்ல மறுத்த ஃபர்ஹாவை, வேறு வழியின்றி தனது சேமிப்பு கிடங்கு அறையில் ஒளித்து வைத்து பூட்டுகிறார்.

அந்த அறைக்குள்ளே அவளது வாழ்க்கை தலைகீழாக மாறுகிறது. காலவரையறையின்றி அங்கேயே தங்கி, மழைநீரை ஒரு சிறிய துளையின் வழியே பிடித்து, குடித்துக்கொண்டு இருளில் சிக்கித் தவிக்கும் ஃபர்ஹா, வன்முறை கற்பனைக்கு எட்டாத கொடூரங்களுக்கு மௌன சாட்சியாகிறாள். தனது அண்டை வீட்டார் கொல்லப்படுவதையும், அவர்களின் வீடுகள் அழிக்கப்படுவதையும், அவர்களின் வாழ்க்கை



மற்றும் அழிவின் ஓசைகள் தனது கிராமத்தை சூழ்ந்து கொள்வதை பயத்துடன் கேட்க ஆரம்பிக்கிறாள். அறையைப் பூட்டிச்சென்ற தனது தந்தை எப்படியாவது திரும்பி விடுவார் என்ற நம்பிக்கையுடன் காத்திருப்பவள், சிதைக்கப்படுவதையும் கதவிடுக்கின் வழியே பார்க்கிறாள். இரண்டு இளம் குழந்தைகள் மற்றும் புதிதாகப் பிறந்த குழந்தை உட்பட ஒரு மொத்த குடும்பத்தையே கொன்று குவிக்கும் இஸ்ரேல் ராணுவ வீரர்களின் கொடூரமான நடத்தை அவளது மென்மையான மனதை உருக்குலையச் செய்கிறது.

படத்தின் முதல் காட்சியில் அவளிடம் தனது வயதிற்கேயான ஒருவித அப்பாவித்தனம் நிறைந்திருந்தது. திருமணத்தைவிட கல்விக்காக தனது தந்தையிடம் வாதாடும் காட்சி அதற்கொரு உதாரணம். கிட்டத்தட்ட தனது வாழ்வின் அடுத்த நிலைக்கு செல்ல வேண்டிய ஒரு சிறுமி இப்போது தனது அப்பாவித்தனத்தை இழந்து, தான் கண்ட காட்சிகளின் வழியே மனதளவில் முன்கூட்டியே தேர்ச்சியும் தளர்ச்சியும் அடையும் சூழலுக்குத் தள்ளப்படுகிறாள். படத்தின் இறுதியில் மனம் நிறைய வெறுமையுடன் அவள் நடந்து செல்லும் காட்சி அதற்கு ஓர் உதாரணம்.

போர் மற்றும் ஆக்கிரமிப்பின் வழியே திணிக்கப்படும் கடுமையான யதார்த்தத்தின் கொடூரம் மூலம், போரிடும் நாடுகளுக்கிடையில் சிக்கிக்கொள்ளும் எளிய மக்களின் வாழ்க்கையை அது எவ்வாறு பாதிக்கிறது என்பதை உண்மைக்கு மிக அருகில் தத்ரூபமாக ஓர் ஆவணப்படத்தைப்போல காண்பிக்கிறது இத்திரைப்படம். சிறுவயதில் தனது பாட்டியிடம் கேட்ட ஓர் உண்மைக் கதையை அடிப்படையாகக் கொண்டு திரைக்கதை அமைத்துள்ளார் இப்படத்தின் இயக்குனர் டாரின் சலாம்.

இலன் பாப்பே, பென்னி மோரிஸ் போன்ற வரலாற்றாசிரியர்களால் ‘நக்பா’ என்று குறிப்பிடும், பாலஸ்தீனம் மீது இஸ்ரேல் நிகழ்த்திய இக்கொடூர நிகழ்வு பாலஸ்தீன வரலாற்றில் ஓர் ஆறாத வடுவாகிப்போனது. மேலும் இது பிரதான ஊடகங்களால் பெரும்பாலும் திட்டமிட்டு புறக்கணிக்கப்பட்டது. இதன் விளைவாக, பாலஸ்தீனியர்கள் அக்காலகட்டத்தில் அனுபவித்த கொடுமைகளைப் பற்றி உலகெங்கிலும் உள்ள பெரும்பான்மை மக்களுக்குத் தெரியாத வகையில் இஸ்ரேல் பார்த்துக்கொண்டது. இப்படியாக அரசியல் கண்ணோட்டத்தில் மட்டுமின்றி, தனி மனிதக் கண்ணோட்டத்திலும் தன்னைச்சுற்றி நிகழ்வதை சித்தரிக்க முயன்றிருக்கிறார் இயக்குநர். மேலும், பல தசாப்தங்களாக வன்முறை மற்றும் அடக்குமுறையின் சுமைகளை சகித்துக்கொண்ட பாலஸ்தீனப் பெண்களின் மீள்திறன் மற்றும் தைரியத்தையும் எடுத்துக்காட்ட அவர் விரும்பினார்.

இப்படம் செப்டம்பர் 2021ஆம் ஆண்டில் டொராண்டோ சர்வதேச திரைப்பட விழாவில் திரையிடப்பட்டு,



விமர்சகர்களின் பாராட்டையும், பார்வையாளர்களிடமிருந்து நேர்மறையான விமர்சனங்களையும் பெற்றது. ஜோர்டான் அரசு இத்திரைப்படத்தை 2023ஆம் ஆண்டின் ஆஸ்கர் விருதுக்கு தேர்ந்தெடுத்தது. அடுத்து ஆசிய பசிபிக் ஸ்கிரீன் விருதுகளில் சிறந்த இளைஞர்களுக்கான திரைப்படமாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டது. ஆஸ்கார் நாமினேஷனைத் தவறவிட்டபோதும் திரைப்பட விழாக்களைத் தாண்டி இப்படம் வணிக ரீதியாகவும் மிகப்பெரிய வெற்றியைப் பெற்றது. இது நெட்பிளிக்ஸ் தளத்தில் அதிகம் பார்க்கப்பட்ட அரபு மொழிப்படங்களில் ஒன்றாகவும் மாறியது. மேலும், நக்பா நிகழ்வின் யதார்த்தமான மற்றும் உணர்ச்சிகரமான சித்தரிப்பிற்காகவும், வலுவான நடிப்பு மற்றும் ஒளிப்பதிவுக்காகவும் பாராட்டப்பட்டது.

பாராட்டுக்கள் ஒரு பக்கம் என்றால், அதற்கிணையாக சர்ச்சைகளும் இல்லாமல் இல்லை. பாலஸ்தீனியர்களுக்கு எதிரான இஸ்ரேலிய வன்முறையைத் திரையில் சித்தரிப்பது, இஸ்ரேலிய அதிகாரிகளால் வெகுவாக கண்டிக்கப்பட்டது. சில இஸ்ரேலிய அதிகாரிகள் மற்றும் ஊடக நிறுவனங்களால் இப்படம் வெகுவான சர்ச்சைகளையும், விமர்சனங்களையும் எதிர்கொண்டது. ஒருதலைப்பட்சமாகவும், யூதர்களுக்கு விரோதமாகவும் சித்தரித்திருப்பதாக குற்றம் சாட்டப்பட்டது.

பதவி விலகிய இஸ்ரேல் நிதி







அமைச்சர் அவிக்டோர் லிபர்மேன், இத்திரைப்படம் குறித்து, "நெட்ஃபிளிக்ஸ் இந்தத் திரைப்படத்தை வெளியிட முடிவு செய்தது பைத்தியக்காரத்தனமானது. படத்தின் முழு நோக்கமும் இஸ்ரேலிய வீரர்களுக்கு எதிரான பொய்யான பாசாங்கு மற்றும் தூண்டுதலை உருவாக்குவது மட்டுமே" என்பதாகத் தனது அறிக்கையை வெளியிட்டார். இஸ்ரேலின் ஜாஃபா நகரில் உள்ள அல் சரயா தியேட்டரில் இப்படத்தைத் திரையிடுவதற்கான நிதியை நிறுத்தும்படி அமைச்சருக்கு உத்தரவிட்டுள்ளதாக மேலும் லிபர்மேன் கூறினார்.

ஆனாலும் உண்மையில் நக்பாவின்போது பாலஸ்தீனியர்களுக்கு நிகழ்ந்தது என்ன என்பதற்கான யதார்த்தத்தைக் காட்ட முயன்றதன் வழியே இப்படத்தை இயக்குநர் சலாம் நியாயப்படுத்தியிருக்கிறார். அதே சமயம் கைக்குழந்தையைக் கொல்ல மனமில்லாமல் அதன் மீது கர்சீப்பை வீசிவிட்டு செல்லும் இஸ்ரேலிய வீரன் ஒருவனது மனநிலையையும் இத்திரைப்படம் காண்பிக்கத் தவறவில்லை.

வன்முறைக்கு வன்முறை தீர்வாகாது என்பதை மாற்றி இத்திரைப்படம் அணுகியிருக்கும் புதிய கோணத்தை ஏற்றுக்கொள்ளாமலும் இருக்க முடியவில்லை. தானிய மூட்டைக்குள் ஒரு துப்பாக்கி ஒளித்து வைக்கப்பட்டிருப்பதை ஃபர்ஹா காண்கிறாள். வன்முறை வன்முறையின் கொடுமைகளை பார்த்த அவளே இறுதியில் கதவை உடைக்க துப்பாக்கியை உபயோகிக்கும் காட்சி ஓர் அழகான முரண்.

‘மகிழ்ச்சி’ அல்லது ‘கொண்டாட்டம்’ என்று பொருள்படும் ‘ஃபர்ஹா’ என்ற பெயரை வைத்துத்திருக்கும் இவள், தன் இளவயதில் காண வேண்டிய அனைத்தையும் இழந்துவிட்டு ஓர் அனாதையாக ஊரை விட்டுச் செல்ல வேண்டிய நிர்பந்தமாகிப்போனது காலத்தின் கொடுமை. தனது கிராமத்தையும் அதன் மக்களையும் பாதுகாக்க முயன்ற அவளது தந்தை பற்றிய எந்தத் தகவலும் பின்னர் கிடைக்கப்பெறவில்லை. ஓர் அகதியாக சிரியாவுக்குச் செல்லும் ஃபர்ஹாவின் மூலம், இக்கதை தலைமுறைகள் தாண்டி திரைப்படமாக உருப்பெற்றிருக்கிறது.

531 பூர்வீக கிராமங்களில் இருந்து 7,50,000 குடிமக்கள் இடம்பெயர வேண்டிய கொடுமையான சூழல், அதனிடையே இறந்து போன 15,000 பேரின் இறப்பின் மூலம், இயக்குநர் சலாம் செவிவழியாக கேட்ட கதைகள் மட்டுமின்றி பாலஸ்தீனம் தாண்டி உலகெங்கும் இன்னும் சொல்லப்படாத எத்தனை எத்தனை ஃபர்ஹாக்களின் கதைகள் வரலாற்றின் இருள் சூழ்ந்த இடுக்குகளில் ஒளிந்திருக்கின்றன என்பது காலம் மட்டுமே அறியும்.

‘ஃபர்ஹா’ வரலாற்றின் பக்கங்களில் இஸ்ரேல் நிகழ்த்திய ஒரு இருண்ட அத்தியாயத்தை வெளிச்சம் போட்டுக் காட்டும் ஒரு அவசியமான திரைப்படம்.

# சர்ச்சை, தைரியம் மற்றும் ஆஸ்கார் விருது: ஃபர்ஹா




## Darin J. Sallam

ஃபர்ஹா திரைப்படத்தைச் சுற்றியுள்ள சர்ச்சைகள் மற்றும் அத்திரைப்படம் தனக்கு எத்தனை நெருக்கமான ஒன்று என்பதைப் பற்றி இயக்குனர் டாரின் சலாம் அவர்கள் டைம்ஸ் பத்திரிக்கைக்கு அளித்த பேட்டி.

தமிழாக்கம்:
**ஜி.ஏ. கௌதம்**

**ஃபர்ஹா திரைப்படம் ஓர் உண்மையான பெண்ணின் வாழ்வை அடிப்படையாகக் கொண்டது என்கிறீர்கள். அப்படியானால் அவரது கதையை நீங்கள் எவ்வாறு கண்டடைந்தீர்கள், அது உங்களை எவ்வாறு பாதித்தது?**

கதை தான் என்னைக் கண்டடைந்தது என்று நான் எப்போதும் கூறுவேன். 1948ஆம் ஆண்டில் பாலஸ்தீனத்தில் வசித்து வந்த ரெடிஹ் என்ற பெண், அச்சமயத்தில் நிகழ்ந்து கொண்டிருந்த இஸ்ரேலின் படையெடுப்பிலிருந்து பாதுகாக்க அவளது தந்தையால் ஒரு சரக்கு அறையில் அடைக்கப்பட்டாள். பின்னர், ரெடிஹ் உயிர் பிழைத்து அங்கிருந்து சிரியாவுக்கு இடம் பெயர்ந்தாள். அங்கு அவள் தனது கதையை இன்னொரு பெண்ணுடன் பகிர்ந்து கொண்டாள். அந்த இன்னொரு பெண் வளர்ந்து, தனக்கென ஒரு மகளைப் பெற்றாள். வளர்ந்த தன் மகளிடம் ரெடிஹ் பற்றி தாய் சொன்ன கதை இது. அந்த மகள் நான்.

நான் 'கிளாஸ்ட்ரோஃபோபியா'வினால் பாதிக்கப்பட்டிருப்பதால், ரெடிஹ்க்கு என்ன நிகழ்ந்திருக்கும் என்று தொடர்ந்து அவரைப்பற்றியே நினைத்துக் கொண்டிருந்தேன். அவருடன் என்னை மானசீகமாகத் தொடர்புபடுத்திக் கொண்டேன். பாலஸ்தீன வம்சாவளியைச் சேர்ந்த ஒவ்வொரு ஜோர்டானியரையும் அல்லது எந்தவொரு அரேபியரையும்

போலவே, பாலஸ்தீனம் மற்றும் நக்பாவைப் பற்றிய கதைகளைக் கேட்டு நாங்கள் வளர்கிறோம். என் தாத்தா, பாட்டி, நண்பர்களின் குடும்பங்களிலிருந்து நான் கேட்ட இந்தக் கதைகள் அனைத்தும் ஒன்றிணைந்து 'ஃபர்ஹா' என்ற கதாபாத்திரத்தை உருவாக்கின. ஃபர்ஹா என்றால் அரபு மொழியில் 'மகிழ்ச்சி' என்று பொருள். நக்பா நிகழ்வுக்கு முன்பு அவர்கள் தங்கள் வாழ்க்கையைப் பற்றி எப்படியெல்லாம் தங்களுக்குள் உரையாடியிருப்பார்கள் என்பதன் காரணமாக இந்தப் பெயரை நான் தேர்ந்தெடுத்தேன். என்னைப் பொறுத்தவரை அவர்களின் மகிழ்ச்சி திருடப்படுவதற்கு முந்தைய வாழ்க்கை அது.

**ரெடிஹ் அவர்களை உங்களால் கண்டுபிடிக்க முடிந்ததா?**

அவரிடம் படத்தைக் காண்பிக்க வேண்டும் என்பதற்காக அவரைக் கண்டுபிடிக்க முயன்றேன். துரதிர்ஷ்டவசமாக, சிரியாவில் போர் துவங்கிய பிறகு அவரது குடும்பம் அவர்கள் வசித்த இடத்திலிருந்து இடம்பெயர்ந்ததால் என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் ஃபர்ஹா திரைப்படம் தொடர்பான ஒரு கேள்வி பதில் அமர்வின் போது, பார்வையாளர்களிலிருந்து ஒரு முதியவர் எழுந்து நின்று, "இது என் தாயின் கதை" என்றார். நான் தேடிக்கொண்டிருக்கும் ரெடிஹ் அவர்களின் மகனாக அவர் இருக்கக்கூடும் என்று நினைத்தேன். பின்னர் அவர், "நான் ரெடிஹின் மகன் இல்லை. ஆனால் என் அம்மாவும் இதே போன்ற ஒரு சூழலை கடந்திருக்கிறார்" என்றார். எனவே இந்த கதையில் ரெடிஹ் மட்டுமல்ல. ஒவ்வொரு பாலஸ்தீனியரும் தங்களைப் பார்க்கிறார்கள் என்று நான் உணர்ந்தேன்.

**ரெடிஹ் அவர்களின் கதையை ஏன் திரைப்படமாக்க முடிவு செய்தீர்கள்?**

ஒரு திரைப்பட இயக்குனராக இக்கதையை உங்கள் எல்லாரிடமும் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற என் அடிப்படை ஆர்வத்தை நான் உணராவிட்டால், குறிப்பாக ஃபர்ஹாவைப் போலவே கதை என்னைத் துரத்தினால், என்னால் வேறு எந்த ஒரு படத்தையும் எடுக்க முடியாது. பாலஸ்தீனத்தில் நக்பா குறித்த; இந்தக் குறிப்பிட்ட காலகட்டத்தைப் பற்றிய திரைப்படங்கள் எதுவும் இல்லை. ஏனைய மற்ற திரைப்படங்களிலும் இல்லை. பலர் என்னிடம், "நீங்கள் ஏன் வேறு நாட்டைப் பற்றிய திரைப்படம் எடுக்கக்கூடாது?" என்று கேட்டார்கள். இது எங்கும், எப்போது வேண்டுமானாலும் நிகழக்கூடிய உலகளாவிய மற்றும் காலத்தால் அழியாத கதை என்று நான் எப்போதும் கூறி வருகிறேன். நான் ஓர் அரசியல்வாதி அல்ல. ஆனால் இந்த இளம் பெண்ணின் குரலுக்கு நான் பொறுப்பு என்பது போல, இந்தக் கதைக்குப் பொறுப்பாக இருக்க முடிவு செய்தேன். ஒரு திரைப்பட எழுத்தாளராகவும், இயக்குநராகவும், பெரும்பாலான திரைப்படங்கள் ஒரு வரையறுக்கப்பட்ட பரப்பில் நிகழ்வது எனக்கு ஒரு சவாலாகும்.

**நக்பாவைப் பற்றியும் அதற்கு வழிவகுத்த ஏனைய நிகழ்வுகளைப் பற்றியும் மேலும் கூற முடியுமா?**

நக்பா என்பது ஒரு பாலஸ்தீனராக நாம் யார், நம் அடையாளம் என்ன என்பதன் ஒரு பகுதி. மீண்டும் சொல்கிறேன். நான் அரசியல்வாதி அல்ல. நான் ஒரு கலைஞன். ஆனால் 1948இல் என் தாத்தாவும், பாட்டியும் கட்டாயப்படுத்தி நாடு கடத்தப்பட்டார்கள் என்றுதான் என்னால் சொல்ல முடியும். அப்போது என் தந்தை ஆறு மாதக் குழந்தை. தங்களுக்கு அருகில் ஒரு படுகொலை நிகழ்வதைக் கேள்விப்பட்டு, உயிருக்கு பயந்து தங்கள் உடைமைகளை எடுத்துக்கொண்டு கிளம்பினார்கள். சில நாட்களில் பிரச்சினை தீர்ந்தபின் திரும்பி விடலாம் என்று தாத்தாவும் பாட்டியும் நினைத்தார்கள். ஆனால் நிலைமை சீராகவில்லை. எனவே அவர்கள் ஜோர்டானுக்கு குடிபெயர்ந்தனர்.



இப்படியான நிகழ்வுகள் பல்வேறு கிராமங்களிலும் நிகழ்ந்துள்ளன.

**இக்காலகட்டத்தை நீங்கள் எப்படி ஆராய்ச்சி செய்தீர்கள் மற்றும் உண்மையான சம்பவங்களுடன் உங்களால் முடிந்தவரை எப்படி நெருக்கமாக இருந்தீர்கள்?**

பாலஸ்தீனிய வேர்களைக் கொண்ட ஒரு ஜோர்டானியக் குடிமகளாக, இக்கதைகளைக் கேட்டு வளர்ந்தாலும், அதை உறுதிப்படுத்த நிறைய ஆராய்ச்சி செய்ய வேண்டியிருந்தது. பாலஸ்தீனத்தின் இனச்சுத்திகரிப்பு குறித்த 'இலான் பாப்பே' அவர்களின் படைப்புகள் போன்று பல புத்தகங்களை நான் வாசித்தேன். அவற்றை அனைவரும் வாசிக்கவும் பரிந்துரைக்கிறேன். இதுபோன்ற நிகழ்வுகளைப் பார்த்தவர்களிடமிருந்து நிறைய வாய்மொழி வரலாறுகளைக் கேட்டேன். இத்தகைய அதீத ஆராய்ச்சி செயல்முறையில் மிகுந்த வலி கொண்டதாக இருந்தது. எழுபது ஆண்டுகளுக்கு முன்பு இதே போன்ற நிகழ்வுகளைப் பார்த்தவர்களை நீங்கள் எளிதில் காண முடியும். அவர்கள் இன்றும் அதைப்பற்றிக் கேட்டால் அதிர்ச்சியடைகிறார்கள். அவர்கள் இன்னமும் தங்கள் வீடுகளையும், வயல்களையும் மீண்டும் பார்வையிடக் காத்திருக்கிறார்கள். அவர்கள் தங்கள் எளிய வாழ்க்கையை எவ்வாறு இழந்திருக்கிறார்கள் என்று நான் உணரும் போது இதயம் சற்று கனக்கத்தான் செய்கிறது.

**நெட்பிளிக்ஸில் வெளியாவது ஒருபுறம் இருக்க, நக்பாவைப் பற்றிய ஒரு திரைப்படத்தை உருவாக்குவது எத்தனை கடினம்?**

பொதுவாகவே ஒரு திரைப்படத்தை உருவாக்குவது மிகவும் சவாலானது. மேலும் மத்திய கிழக்கு நாடுகளில், திரைப்படங்களுக்கான நிதியைப் பெறுவது இன்னும் கடினம். நீங்கள் பாலஸ்தீனத்தைப் பற்றி பேசும்போது, அது மேலும் சவாலாகிறது. ஏனெனில் இது ஒரு தவிர்க்கப்பட்ட தலைப்பு. பாலஸ்தீனியர்களுக்கு ஆதரவாக இருக்கும் இந்தக் கதையைக் கேட்கவும் பலர் விரும்பவில்லை. படத்திற்கு நிதி கிடைப்பது மிகவும் கடினமாக இருந்தது. அதனால் எங்களுக்கு சரியான நேரம் என்ற ஒன்று ஒரு போதும் வராது என்று நாங்கள் நம்பினோம். நாம் தான் அதற்கு சரியான சூழ்நிலையை உருவாக்க வேண்டும்.

**இத்திரைப்படத்தில் ஒரு பாலஸ்தீனியக் குடும்பத்தின் கொலையை நீங்கள் ஏன் சேர்த்தீர்கள்? அதை நீங்கள் எவ்வாறு உணர்வுப்பூர்வமாக எதிர்கொண்டீர்கள்?**

பின்னடைவுகளால் நான் மிகவும் அதிர்ச்சியடைவதற்குக் காரணம், நான் எதையும் வெளிக்காட்டாததுதான். படுகொலைகளின் போது நடந்த சம்பவங்களுடன் ஒப்பிடுகையில், பாலஸ்தீனக் குடும்பம் கொலை செய்யப்படும் அந்தக் காட்சி ஒரு சிறிய நிகழ்வு. இது குறித்து சில இஸ்ரேலிய அதிகாரிகள் ஏன் மிகவும் வருத்தப்படுகிறார்கள் என்று எனக்குத் தெரியவில்லை. தெளிவாகவும், சரியான குவியத்துடனும் (Focus) ஒளிப்பதிவு செய்யப்படாத காட்சி அது. ஏனெனில், இப்படம் இந்த பெண்ணின் வாழ்வைப் பற்றியது என்று நான் எப்போதும் கூறினேன். நான் பத்தோடு பதினொன்றாக யாரோ ஒருவரைப்பற்றி பேச விரும்பவில்லை. கனவு கண்ட குழந்தையாக ஃபர்ஹாவைப் பற்றிப் பேச விரும்புகிறேன். அவள் தன் தோழியை, தந்தையை, வீட்டை, வாழ்க்கையை இழந்தவள். நான் போரைப் பற்றி பேச விரும்பவில்லை. ஆனால் போர் அவளது வாழ்வின் ஒரு பகுதியாக உள்ளது. தான் அந்நிகழ்வின் சாட்சியாக இருப்பதைப் பற்றிய அவளுடைய உணர்வுகளைப் பற்றியது.




**இப்படம் இஸ்ரேலில் பெரும் பின்னடைவை சந்தித்துள்ளது. இதை எந்த அளவுக்கு எதிர்பார்த்தீர்கள்?**

இவ்வளவு பின்னடைவை நான் எதிர்பார்க்கவில்லை. ஏனெனில் படம் வெளியாகி சிறிது காலம் கடந்துவிட்டது. எனவே இப்போது மட்டும் ஏன்? இக்காலகட்டம் எனக்கு விசித்திரமாக இருந்தது. இது ஆஸ்கர் பிரச்சாரத்தைக் கெடுக்கும் நோக்கம் கொண்டது என்று நான் நினைக்கிறேன். எனவே இதெல்லாம் படத்தை எதிர்மறையாக பாதிக்காது என்று நம்புகிறேன். நாங்கள் உண்மையில் மக்களிடையே இத்திரைப்படத்தைக் கொண்டு சேர்ப்பதில் கவனம் செலுத்த விரும்புகிறோம். அப்படிப் பார்த்தால், அவர்களுக்கு இது ஓர் அதிர்ச்சி. உண்மை வலிக்கும் என்பதை நான் புரிந்துகொள்கிறேன். ஆனால் எங்களுக்கு என்ன நிகழ்ந்தது என்பதைப் பேசுவதும் எங்கள் அடையாளத்தை உலகிற்குப் பகிர்ந்து கொள்வதும் எங்கள் உரிமை.

**சில இஸ்ரேலிய அதிகாரிகள் இப்படம் ஒரு தவறான கதையை உருவாக்குகிறது என்று கூறுகிறார்கள். அதற்கு உங்கள் பதில் என்ன?**

நக்பாவை மறுப்பது என்பது நான் யார் என்பதையும், என் இருப்பையும் மறுப்பதற்கு சமம். என் தாத்தாவும், பாட்டியும், தந்தையும் கடந்து வந்த ஒரு துயரத்தை மறுப்பதும், நான் சந்திக்கும் தாக்குதல்களில் அதை கேலி செய்வதும் மிகவும் இழிவான ஒன்று. நான் யார், நான் எங்கிருந்து வருகிறேன், நான் எவ்வாறு உடை அணிகிறேன் என்பதைப் பற்றி வெறுக்கத்தக்க, இனவாதக் கருத்துக்களைப் பெறுகிறேன். இது ஏற்றுக்கொள்ள முடியாதது. அவர்கள் தொடர்ந்து பேசிக்கொண்டே இருக்கலாம். அதை என்னால் எதுவும் செய்ய முடியாது. ஆனால் இது மனிதத்தன்மையற்ற செயல்.

**படத்தின் ஐ.எம்.டி.பி (IMDB) மதிப்பீட்டைக் குறிவைத்து அவதூறு பிரச்சாரம் நிகழ்ந்ததாக நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள். அதைப்பற்றி மேலும் கூற முடியுமா?**

ஆம். அப்படியான ஒரு தாக்குதல் நிகழ்ந்தது. நான் தாக்குதல் என்று சொல்வது இஸ்ரேலிய ஊடகங்கள், தனிநபர்கள் மற்றும் அமைச்சர்கள் என எல்லா இடங்களிலிருந்தும் நான் குறிப்பிடுகிறேன். நெட்பிளிக்ஸ் தளத்தில் படம் வெளியாவதற்கு முன்பு, மக்களிடம் சென்று அதைத் தவறாக மதிப்பிடச் சொன்னார்கள். திடீரென டிசம்பர் 1ஆம் தேதி படம் வெளியாவதாக இருந்த நேரத்திலிருந்து சில மணி நேரங்களிலேயே பெரும் எண்ணிக்கையிலான மக்கள், படத்திற்கு எதிராக வாக்களித்து ஜீரோ மதிப்பெண் கொடுத்து, “இது ஒரு பெரிய பொய்” என்பது மாதிரியான கருத்துகளைத் தெரிவித்தார்கள். இது ஒரு திட்டமிடப்பட்ட பிரச்சாரமாக இருந்தது. ஏனெனில் அந்நேரத்தில் படம் நெட்பிளிக்ஸில்கூட வெளிவரவில்லை. எனவே அவர்கள் வெளியாகாத ஒரு திரைப்படத்தை எவ்வாறு மதிப்பிட முடியும்? ஒரு கலைஞனாக, உங்கள் படைப்புகளுக்காக நீங்கள் தாக்கப்படுகிறீர்கள் என்ற உணர்வு எத்தனை அருவருப்பானது. அதிர்ஷ்டவசமாக, ஒரு பத்திரிகையாளர் இதைப் பற்றி பேசினார். அதன்பிறகுதான் மக்கள் படத்தைப் பார்க்கவும் திரைப்படம் பற்றிய உண்மையான செய்திகளைப் பரப்பவும் படத்தின் மீது நேர்மையான விமர்சனங்களை வழங்கவும் தொடங்கினார்கள்.

**பின்னடைவுக்கு மத்தியில் நெட்பிளிக்ஸ் வெளியீடு எப்படி நிகழ்ந்தது?**

உண்மையில், பின்னடைவுக்குப் பிறகு நாங்கள் நெட்பிளிக்ஸ் நிறுவனத்தை அணுகவே இல்லை. ஆனால் அவர்கள் சரியான ஒன்றைச் செய்தார்கள். படத்தை தங்களது தளத்தில் வெளியிட்டார்கள்.



என்னைப் பொறுத்தவரை, இதுதான் உண்மையான துணிச்சல் மற்றும் எங்களுக்குத் தேவையான ஆதரவு. இதனால்அவர்கள் மீது எங்களுக்குப் புதிய மரியாதை பிறந்துள்ளது.

**இஸ்ரேல் அல்லது பாலஸ்தீனப் பிரதேசங்களில் படம் திரையிடப்பட்டதா?**

பாலஸ்தீனம், ரமல்லா, காஸா, ரஃபா ஆகிய இடங்களில் படம் திரையிடப்பட்டது. நெட்பிளிக்ஸில் படம் வெளியாவதற்கு ஒருநாள் முன்பு, இது ஜாஃபாவில் உள்ள ஒரு திரையரங்கில் திரையிடப்பட்டது. இந்த இடத்தில்தான் இஸ்ரேலிய அரசாங்கமும் ஊடகங்களும் பைத்தியம் பிடித்து படத்தைத் தாக்கத் தொடங்கின. மேலும் படத்தை திரையிடுவதற்கான திரையரங்கின் நிதியை நிறுத்தப்போவதாக பயமுறுத்தின.

**பாலஸ்தீனர்கள் இத்திரைப்படம் குறித்து கருத்துக்கள் தெரிவித்திருக்கிறார்களா?**

பாலஸ்தீனியர்கள் மட்டுமல்ல. உலகம் முழுவதிலும் இருந்து படத்தைப் பற்றி நமக்கு வரும் அழகான செய்திகள் ஏராளம். சிலர் தங்கள் மகளை ஃபர்ஹாவின் இடத்தில் வைத்து கற்பனை செய்திருக்கிறார்கள். என்னைப் பொறுத்தவரை அதுதான் இந்தத் திரைப்படம். இது நட்பு, காதல், இழப்பை எதிர்கொண்ட விடுதலை ஆகியவற்றைப் பற்றியதோர் இளைஞர்களுக்கான படம்.

**ஃபர்ஹா திரைப்படத்தின் ஆஸ்கர் தொடர்பான முணுமுணுப்புகளைக் கேட்கும்போது எப்படி இருக்கிறது?**

இந்தப் படம் எந்த அநீதியும் சந்திக்காது என்று நம்புகிறேன். படம் பார்த்த பின்னர் ஆஸ்கர் விருதுகளில் நியாயமான வாய்ப்பு வழங்கப்படும் என்று நம்புகிறேன். நான் எப்போதும் கூறுவது,

“நாம் என்றும் நிரந்தரமாக வாழப்போவதில்லை. ஆனால் திரைப்படங்களால் முடியும்”.

இப்படம் தற்போது மக்கள் மனதில் நீங்கா இடம் பிடித்துள்ளது. அது என்றென்றும் அல்லது இனி வரவிருக்கும் தலைமுறைகளிடத்தில் வாழும் என்று நம்புகிறேன்.

# பக்க பலன்



மேலவெள்ளூர் சிவகாம சுந்தரி
*-Ethirajan Sreenivasan*
@sculptographer





முன்னட்டையில்: தேவிபாரதி

Aavanalzhi - An Offline Tamil Bi-monthly, February - March 2024 Issue. For private circulation only. Not for sale.




பிப்ரவரி - மார்ச் 2024 இதழ் 22 நாழி 3 ஆவம் 4 ஆசிரியர்: சுதேசமித்திரன்

# ஆவநாழி

aavanalzhi

கலை சினிமா இலக்கிய மென்னிதழ்



நாஞ்சில் நாடன் லாவண்யா சுந்தரராஜன் அல்போன்ஸ் பிரகாஷ்
ஜி.ஏ.கௌதம் வல்சலா ஜமதக்னி
ஜீனத் மு.ஆறுமுக விக்னேஷ் புதுவை இளவேனில்
ஓவியர் ஜீவா அரவிந்த் வடசேரி சுதேசமித்திரன்